ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமுடும்பைபூர்ணாய நம:
ஸ்ரீமத் வரவரமுநயே நம:
ஸ்ரீமத் வரதகுரவே நம:

# எம்பெருமானாரின் திருமேனிசம்பந்தம் பெற்றவர்கள்
# ஒரு ஆராய்ச்சிக் கட்டுரை




யோ நித்யமச்யுத பதாம்புஜ யுக்ம ருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே /
அஸ்மத் குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்ய சரணௌ ஸரணம் ப்ரபத்யே //

எம்பெருமானாரின் வம்ச பரம்பரை இவருடைய மாதுலர் (மாமா) பெரிய திருமலைநம்பியின் திருவம்சத்தார்கள் முதல் தொடங்குகிறது. கீழே கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் எம்பெருமானார் உறவினர்களின் திருமாளிகை வைபவ நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டது. இந்த கட்டுரையின் நோக்கம் எம்பெருமானார் உறவினர்களைப் பற்றி தெளிவாக தெரிந்து கொள்வது தான். இந்த உறவுமுறை பற்றி நம் பூர்வாசாரியர்களின் நூல்களில் தெளிவாக இல்லை. ஆதலால் அடியேன் எம்பெருமானாரின் திருமேனி சம்பந்தமுள்ள பல ஆசார்யர்கள் திருமாளிகை வைபவ நூல்களில் கொடுத்துள்ள விவரங்களையெல்லாம் தொகுத்து இக்கட்டுரையை உங்களுக்குச் சமர்ப்பிக்கிறேன். இதில் ஏதேனும் ஆசார்யர்களைப் பற்றிய விவரம் குறிப்பிடாமல் இருந்தால் தெரிவிக்கவும். அதனையும் சேர்த்து பின்பு வெளியிடலாம். இந்தக் கட்டுரை எல்லோருக்கும் பயன்படும் என்று நம்புகிறேன்.

<u>பெரிய திருமலைநம்பி மற்றும் இவருடைய பத்நி (கிடாம்பி ஆச்சானின் அத்தை)</u>

↓

சகோதரிகள்- 3 குமரார்கள் - 3 மகள்கள்- 2 மருமகன்கள்- 4 பேரன் - 1

<u>எம்பெருமானார் மற்றும் இவருடைய பத்நி தஞ்சமாம்பாள்</u>

↓

சகோதரிகள்-3 குமரார்கள்-2 மருமகன்கள்-3 சிறியதாயாரின் குமாரர்கள்-3

இனி இவர்களைப் பற்றி விரிவாகக் கீழே கண்போம்.

## <u>பெரிய திருமலைநம்பியின் உறவினர்கள்</u>

**சகோதரிகள் - மூவர்**

1)பூதேவி என்னும் காந்திமதி – இவர் கணவர் ஸ்ரீபெரும்பூதூர் கேசவஸோமயாஜியார். குமாரர் - **எம்பெருமானார்**. இவருடைய வைபவம் நம் பூர்வர்கள் அருளியுள்ள பல் வேறு க்ரந்தங்களிலிருந்து அறியலாம்.

2) ஸ்ரீதேவி என்னும் த்யுதிமதி (பெரிய பிராட்டியார்) – இவர் கணவர் மதுரமங்கலம் கமலநயந பட்டர். குமாரர்கள் - எம்பார் (கோவிந்தர்), சிறிய கோவிந்தப் பெருமாள் - இவர் குமாரர் - பராங்குச நம்பி. சிறிய கோவிந்தப்பெருமாளுக்கு ஒரு குமாரர் அவதரித்ததைக் கேள்விப் பட்டு, உடையவர் அவர் திருமாளிகைக்கு எழுந்தருளி, எம்பாரைப் பார்த்து இந்தக் குழந்தைக்கு நம்மாழ்வார் திருநாமத்தைச் சாத்தும் என்று கேட்டுக் கொண்டபடி இவருக்கு பராங்குச நம்பி என்ற பெயர் சூட்டப்பட்டது. இதனால் உடையவர் ஆளவந்தாருடைய மூன்றாவது குறையை அடியோடு போக்கினார். தமிழில் வல்லவரான பராங்குச நம்பியை கூரத்தாழ்வான் பாலேய் தமிழர் என்று கூறுவர்.

எம்பார் அருளிச்செய்தருளின ப்ரபந்தம் - விஜ்ஞானஸ்துதி. இவர் எம்பெருமானாரைவிட்டுப் பிரியாமல் இருந்ததால், ராமாநுஜ பதச்சாயா (இராமாநுஜருடைய திருவடி நிழலாய் இருப்பவர்) என்ற பெயர் பெற்றார். இவர் எம்பெருமானாருக்குச் செய்த கைங்கர்யங்கள் - திருமேனி திருவடிகள் பிடிக்கவும், எண்ணெய்க்காப்பு சாத்தவும், திருப்பரியட்டங்கள் திருத்தவும், திருக்கை சமர்ப்பிக்கவும், திருப்படுக்கை சோதிக்கவும், திருமேனி காவல் முதலான கைங்கர்யங்கள். கோவிந்தர் பரம வைராக்யம் உடையவராய் இருந்தபடியாலே ஸந்யாஸாஸ்ரமத்தைப் பெற்று எம்பார் என்னும் திருநாமத்தை அடைந்தார். எம்பெருமானாரின் நியமனப்படி எம்பார் பட்டருக்கு ஆசார்யரானார்.

3) மூன்றாவது சகோதரியின் பெயர் தெரியவில்லை. இவர் குமாரர் பாலதந்வி என்னும் இளையவில்லி ஆச்சான். இவர் இராமானுஜருடைய சிறிய தாயரின் திருக்குமாரர். பெரியதிருமலை நம்பியின் மருமகன் ஆவார். ஆகையால் பெரியதிருமலை நம்பிகளிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டு இருந்தார். இவர் வடமொழியில் பாலதந்வி என்று அழைக்கப்பட்டார். இவர் எம்பாரைப்போலே உடையவருக்கு சிறியதாயார் குமாரராய் அவதரித்து உடையவருடைய திருமேனி சம்பந்தம் பெற்றவர். பெருமாளுக்கு (இராமருக்கு) இளையபெருமாள் எல்லா அடிமைகளும் செய்ததுபோலே, உடையவர் திருவடிகளிலே சகல கைங்கர்யங்களும் இவர் செய்தமையால் எம்பெருமானாராலே இளையவில்லி ஆச்சான் என்ற திருநாமம் சாத்தப்பெற்றார். எம்பெருமானாருடைய நியமனப்படி பெரிய

திருமலை நம்பியிடம் கைங்கர்யங்கள் செய்து வந்தார். எம்பெருமானார் திருநாடு அலங்கரித்ததாக கனவில் கண்ட அளவிலே, எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று சொல்லி மூச்சடங்கப்பெற்றார்.

## குமாரர்கள் - மூவர்

1)பிள்ளை திருமலை நம்பி
2)ராமாநுஜன்
3)பிள்ளான் (திருக்குருகைபிரான் பிள்ளான்) - எம்பெருமானாரின் அபிமான புத்திரர். எம்பெருமானார் திருமலை நம்பியிடம் கோவிந்தரை (எம்பாரை) யாசித்துப் பெற்ற போது, நம்பி தாமே தம் குமாரரான பிள்ளானை அபிமான புத்திரராக வைத்துக் கொள்ளும்படி யதிராஜரிடம் அளித்தார். திருக்குருகைபிரான் என்னும் திருநாமம் நம்மாழ்வாரை குறிக்கும். திருக்கோட்டியூர் நம்பிக்கும் திருக்குருகைபிரான் என்னும் ஒரு திருநாமம் உண்டு. ஆதலால் இவ்விருவரையும் குறிக்கும் திருநாமமான **திருக்குருகைபிரான்** என்னும் திருநாமத்தை பிள்ளானுக்கு இட்டு **திருக்குருகைபிரான் பிள்ளான்** என்று அழைத்தார். இவர் எம்பெருமானாரின் கட்டளையின் பேரில் திருவாய்மொழிக்கு **ஆறாயிரப்படி** வ்யாக்யானம் எழுதினார். இதுவே திருவாய்மொழிக்கு முதன் முதலில் எளிய முறையில் எழுதப்பட்ட வ்யாக்யானம் ஆகும். இந்த ஆறாயிரப்படி வ்யாக்யானமே ஒன்பதினாயிரப்படி தொடக்கமாக முப்பத்தாறாயிரப்படி ஈறாக உள்ள திருவாய்மொழி வ்யாக்யானங்களுக்கு ஒரு வழி காட்டியாய் அமைந்தது.

## குமாரத்திகள் - இருவர்

1)**அலர்மேல் மங்கை நாச்சியார்** - இவர் கணவர் அலங்கார வேங்கடவர் என்னும் திருவேங்கடமூர்த்தி (அருளாளப் பெருமாள் எம்பெருமானாரின் பூர்வாச்ரம திருக்குமாரார்) - இவர் திருக்குமாரர் - விஞ்சிமூர் தாதாச்சார்யர். திருவேங்கடமூர்த்தி தம் திருத்தகப்பனார் யக்ஞமூர்த்தி, எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயித்து ஸ்ரீவைஷ்ணவ சன்யாச ஆச்ரமியாய் ஸ்ரீஅருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்னும் திருநாமத்துடன் ஸ்ரீரங்கத்தில் இருப்பதை அறிந்து, அங்கு சென்று அவரையும் எம்பெருமானாரையும் திருவடி தொழுதார். எம்பெருமானாரும் அவருக்கு **அலங்காரவேங்கடவர்** என்ற திருநாமமிட்டு தன்னுடைய சிஷ்யராக ஆக்கிக்கொண்டார். இதனைக் கேள்வியுற்ற பெரிய திருமலை நம்பி தன் மகள் அலர்மேல் மங்கையை அலங்கார வேங்கடவர்க்கு

திருக்கல்யாணம் செய்து வைத்தார். அலங்கார வேங்கடவர்க்கு திருவேங்கடமுடையான் திருவருளால் ஒரு திருக்குமாரர் அவதரித்தார். அந்த குழந்தைக்கு **தாத்தாச்சாரியர்** என்ற திருநாமத்தை சாற்றி அழைத்தார். இவரே பிற்காலத்தில் **விஞ்சிமூர் தாத்தாச்சாரியர்** என்ற பிரஸித்தி பெற்ற மஹாவித்தான் ஆவார். **இவர் திருமலை நம்பியின் பேரன் ஆவார்.**

2) இரண்டாவது குமாரத்தியின் பெயர் தெரியவில்லை. இவர் கணவர் சுந்தரதேசிகன் என்னும் அழகப்பிரான். இவர் ஆளந்தார் சிஷ்யர். இவர் ஆளவந்தார் நியமனப்படி திருமலையில் கைங்கர்யம் செய்து வந்தார். இவருடைய குமாரர்கள் - ஈச்சம்பாடி ஆச்சான், ஈச்சம்பாடி ஜீயர். எம்பெருமானார் திருமலைக்கு எழுந்தருளிய போது திருமலை நம்பிகளின் நியமனத்தால், அவருக்கு சுந்தரதேசிகன் **தாபநீய உபநிஷத், ந்ருஸிம்ஹ மந்தரம்** முதலானவைகளை உபதேசித்தார். இதனால் இவர் எம்பெருமானாருக்கு குருவாக விளங்கினார்.

**மருமகன்கள் - நால்வர்**

1) எம்பெருமானார் 2) எம்பார் 3) சிறிய கோவிந்தப் பெருமாள்
4) பாலதந்வி என்னும் இளையவில்லி ஆச்சான்.

**பெரிய திருமலைநம்பியின் பத்னி** – இவர் கிடாம்பி ஆச்சானின் **(ப்ரணதார்த்திஹரர்)** அத்தை ஆவார். அத்தையின் பெயர் தெரியவில்லை. (கிடாம்பி ஆச்சான் பெரிய திருமலை நம்பியின் மைத்துனர் குமாரர்). கிடாம்பி ஆச்சான் என்ற பெயர் **கடாம்பு ஆச்சான்** என்பதன் மரூவு எனலாம். (கட+அம்பு = கடாம்பு). கடம் என்னும் வடசொல் குடம் என்றும், அம்பு என்னும் வடசொல் நீர் என்றும் பொருள் தரும். இவர் எம்பெருமானுக்குத் தீர்த்த கைங்கர்யம் பண்ணி வந்த குடும்பத்தில் அவதாரம் செய்தவர் என்று தெரிகிறது. ஆச்சான் என்ற சொல் ஆசான் என்ற சொல்லில் வல்லினம் இரட்டித்து வந்தது எனலாம். இவர் தன்னுடைய அத்தை கணவரான பெரிய திருமலை நம்பிக்கு உதவியாக இருந்து திருமஞ்சன கைங்கர்யம் பண்ணி அதனால் கிடாம்பி ஆச்சான் என்ற பெயர் பெற்றிருக்கலாம்.

கிடாம்பி ஆச்சான் இயற்பெயர் **ப்ரணதார்த்திஹரர்.** இத்திருநாமம் காஞ்சி வரதராஜப் பெருமாளுடைய திருநாமம் ஆகும். கிடாம்பி ஆச்சானின்

இயற்பெயரிலிருந்து இவர் காஞ்சி திவ்யதேசத்தைச் சேர்ந்தவர் என்று உறுதியாகிறது. இவருடைய தமையனாரின் பெயர் **விஷ்ணவாசார்யர்.**

கிடாம்பி ஆச்சான் எம்பெருமானார் மடத்தில் திருமடப்பள்ளி கைங்கர்யம் செய்து வந்தார். உடையவர் ஸ்ரீபாஷ்யத்தை எழுதி முடித்தவுடன் இவரையும் கிடாம்பிப் பெருமாளையும் ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகோசத்துடன் காஷ்மீர தேசத்துக்கு அனுப்பி சாரதா பீடத்தில் வைத்து அங்கீகாரம் பெறச் செய்தார். கிடாம்பி ஆச்சான் வழிவந்த கிடாம்பி அப்புள்ளார் மாமுனிகள் ஏற்படுத்திய அஷ்டதிக்கஜங்களுள் ஒருவராவார்.

## எம்பெருமானார்

ஸ்வாமி எம்பெருமானாரின் உறவினர்களைப் பற்றிய விவரங்களை கீழே அனுபவிப்போம்.

**சகோதரிகள் - மூவர்**

1)நாச்சியரம்மன் - இவர் கணவர் ஆனந்த தீக்ஷிதர். குமாரர் தாசரதி என்னும் **முதலியாண்டான்.** (எம்பெருமானாரின் மருமான்). எம்பெருமானார் சிஷ்யர்கள் அனைவருக்கும் நிர்வாஹகராய் இருந்ததால் **முதலியாண்டான்** என்று அழைக்கப்பட்டார். எம்பெருமானாருடைய திருவடிஸ்தானமாய் இருந்து அவருக்கு அந்தரங்க கைங்கர்யங்கள் செய்தமையால், எம்பெருமானார் திருவடிநிலை இன்றளவும் முதலியாண்டான் என்றே அழைக்கப்படுகிறது. எம்பெருமானார் இவரைத் தமது த்ருதண்டமாக அபிமானித்தார். எம்பெருமானார் நியமனத்தால் பெரியநம்பி திருக்குமாரத்தி அத்துழாய்க்குச் சிதனவெள்ளாட்டியாகி (உதவியாய் இருந்து காரியங்கள் செய்பவர்) தாஸவ்ருத்திகள் செய்த பெரியவர் இவர். இவர் எம்பெருமானுருக்கு திருவடிகளுமாய் த்ரிதண்டமுமாயிருப்பார். எம்பெருமானார் ஸந்யாஸ ஆச்ரமம் ஏற்றுக்கொண்ட பொழுது **'முதலியாண்டானைத் தவிர என்னால் எல்லாம் துறக்கப்பட்டன'** என்றாராம்.

2) இரண்டவது சகோதரியின் பெயர் தெரியவில்லை. இவர் கணவர் **முடும்பை நம்பி என்னும் ஸ்ரீவரதாசார்யர்**. குமாரர் - ஸ்ரீராமாநுஜநம்பி.

(எம்பெருமானாரின் மருமான்). ஸ்ரீராமாநுஜநம்பியின் குமாரர் - முடும்பையாண்டான் என்னும் தாசரதி. தாசரதி முடும்பையிலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு குடிபெயர்ந்தார். வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளைலோகாசாரியர், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா, எறும்பியப்பா, இராமாநுஜம் பிள்ளை, ஆத்தான் ஸ்வாமி ஆகியோர் முடம்பை வம்சத்தில் அவதரித்தவர்கள்.

3) மூன்றாவது சகோதரியின் பெயர் மற்றும் அவரது கணவரின் பெயர் தெரியவில்லை. இவரது குமாரர் - வரத விஷ்ணு என்னும் நடாதூராழ்வான். இவர் எம்பெருமானாரின் மருமகன். இவர் காஞ்சியில் ஸ்ரீவத்ஸகோத்திரத்தில் அவதரித்தார். இவர் ராமாநுஜருக்கு நித்ய அந்தரங்க கைங்கர்யங்களைச் செய்து வந்தார். இவருடைய பேரர் வாத்ஸ்ய வரதாசார்யர் என்னும் திருநாமம் உடையவரான நடாதூரம்மாள். நடாதூராழ்வான் நடாதுரம்மாளை எங்களாழ்வானிடத்தில் ஆச்ரயிக்கச் செய்தார். நடாதூரம்மாள் எங்களாழ்வானின் ப்ரதான சிஷ்யர் ஆவார். நடாதுரம்மாளுக்கு ஆசார்யர் ஆனமையாலே அம்மாளாசாரியர் என்று அழைக்கப்பட்டார் எங்களாழ்வான்.

நடாதூராழ்வான் அருளிய க்ரந்தமான மாநயாதாத்ம்ய நிர்ணயத்தில் இருந்து சில பகுதிகள் வேதாந்த தேசிகரால் ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் எடுக்கப்பட்டுள்ளன.

எம்பெருமானார் நியமித்த நான்கு ஸ்ரீபாஷ்ய சிம்ஹாஸநாதிபதிகளுள் இவரும் ஒருவர் ஆவார். இவர் தம் சிஷ்யர்களுக்கு ஸ்ரீராமாநுஜருடைய திருவடித் தாமரையையே நெஞ்சில் அன்போடு த்யானித்துக்கொண்டு இருந்து, எப்போதும் ராமாநுஜருக்கு கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவர்களாய் தினந்தோறும் யதிராஜருடைய மங்களமான சரித்திரங்களைக் கேட்டுக்கொண்டும், வாசித்துக் கொண்டும், மோக்ஷமடைவதில் கவலை இல்லாதவர்களாய் எப்போதும் வாழ்வீர்களாக என்று சம்சாரத்தைத் தாண்டுவதற்கான உபாயத்தைக் கூறினார். மேலும் இவரைப் பற்றி ந்யாயஸித்தாஞ்ஜநம் மற்றும் ந்யாயபரிஶித்தி முதலான க்ரந்தங்களைப் படித்து தெரிந்து கொள்ளலாம்.

எம்பெருமானாரின் பத்நி – தஞ்சமாம்பாள்

குமாரர்கள் - இருவர்

1)எம்மான் 2) பெம்மான்

எம்பெருமானாருடைய பத்நியின் கர்பத்தில் பிறந்தவர்கள் எம்மான், பெம்மான் என்ற இரட்டைக் குழந்தைகள். இரண்டாம் பிள்ளை பெம்மான் ஆஸூரிப் பெருமாள் என்று அழைக்கப்பட்டார். இவர் வம்சத்தில் அவதரித்தவர் திருநாராயணப்புரத்து ஆய் என்னும் ஜனன்யாசார்யர். ஆயி ஸ்வாமியின் ப்ரதான சிஷ்யர்கள் மணவாளமாமுனிகள் மற்றும் அவருடைய பேரனார் ஜீயர் நாயனார்.

மருமகன்கள் - மூவர்

1)முதலியாண்டான். 2) ஸ்ரீராமாநுஜநம்பி (முடும்பைநம்பியின் குமாரர்) 3)நடாதூராழ்வான்.

சிறியதாயாரின் குமாரர்கள்- மூவர்

1)எம்பார் 2)சிறிய கோவிந்தப் பெருமாள் 3)இளையவில்லி ஆச்சான்

எம்பெருமானாருடன் திருமேனி (தேக) சம்பந்தம் பெற்ற திருவம்சத்தார்களின் பெயர்கள் கீழே வருமாறு (தற்காலத்தில் இந்த திருவம்சத்தார்கள் சிஷ்ய பரிபாலனம் செய்வதற்காக பல உட்பிரிவுடன் தனி தனி திருமாளிகைகள் ஏற்படித்திக் கொண்டு பல திவ்யதேசங்களில் வாழ்ந்து கொண்டு, அங்கு எழுந்திருளியுள்ள எம்பெருமானுக்கு கைங்கர்யங்கள் செய்து வருகிறார்கள்): (இப்பொழுது எம்பெருமானாரின் திருவம்சம் ஆஸூரி வம்சம் என்று அழைக்கப்படுகிறது)

1) திருமலைநம்பி 2) முதலியாண்டான் 3) எம்பார் 4) முடும்பை நம்பி 5) இளையவில்லி ஆச்சான் 6) அருளாளப் பெருமாள் எம்பெருமானார் (அலங்கார வேங்கடவர்) 7) கிடாம்பி ஆச்சான் 8) சுந்தரதேசிகன் 9) நடாதூராழ்வான் (நடாதூரம்மாள்) மற்றும் பலர்.

ஸ்வாமி எம்பெருமானாரின் தன்னேற்றம்

நம் தர்ஸன ஸ்தாபகரான ஸ்வாமி எம்பெருமானார் பிங்கள வருஷம் (கி.பி 1017) சித்திரை மாதம் 13ஆம் தேதி வியாழக்கிழமை ஸுக்ல பக்ஷ பஞ்சமி திதி திருவாதிரை நட்சத்திரத்தில் ஸிம்ஹ லக்னத்தில் ஸ்ரீபெரும்பூதூரில் திருவனந்தாழ்வான் அம்ஸமாய் திருவவதாராம் பண்ணினார். ஸ்வாமி எம்பெருமானார் திருவவதாராத்தின் முக்கிய ப்ரயோஜநமாவது – வேதாந்த வாக்யார்த்தங்களையும், ப்ரஹ்ம ஸுத்ரார்த்தங்களையும், கீதா வாக்யர்தங்களையும் ஸமஞ்ஜஸமாக நிருபணம் பண்ணியருளவே என்று நம்முன்னோர்கள் அருளியுள்ளனர். இவருடைய மிக விரிவான வைபவம் நம் பூர்வர்களின் க்ரந்தங்களில் காணலாம். இவர் நம் குருபரம்பரை ஹாரத்தின் நடுநாயக ரத்நமாக விளங்குகிறார். இவருடைய மேன்மை தோற்ற, நம் பூர்வர்கள் தம் சிஷ்யர்களுக்கு நீர் உம்முடைய பெருமையை நினைத்து இறுமாந்திருக்க வேண்டாம். எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்று இரும். அவரிடமே ஆசார்யத்வபூர்த்தி உள்ளது. நாங்களெல்லாம் அவருடைய ஸம்பந்தத்தை விளைக்கும் உபசாரக ஆசார்யர்களே. அவர் ஒருவரே உத்தாரக ஆசார்யர் என்று உபதேசித்தனர்.

எழுபத்து நான்கு ஸிம்மாசனாதிபதிகள் ஏற்படுத்தியதன் நோக்கம்

ஸ்ரீமந்நாதமுனிகள் ஊரான வீரநாராயணபுரத்தில் (காட்டு மன்னார் கோயில்) உள்ள பெரியதொரு ஏரி எம்பெருமானார் கண்ணில் பட்டது. அதில் உள்ள 74 மடைகள் மூலம் தண்ணீர் பாய்ந்து பரந்த நிலமெங்கும் பயிர்கள் செழித்து வளர்வதைக் கண்டார். அதுபோல் தானும் 74 ஸிம்மாசனாதிபதிகளை ஏற்படுத்தி அவர்கள் மூலம் மக்களிடத்தில் ஞான, அனுஷ்டான, பக்தி, வைராக்ய, ப்ரீதி, கைங்கர்யப் பயிர்களை வளர்த்திட சங்கல்பம் செய்தார். எம்பெருமானார் தர்சனத்தில் ஆசை உடையோர்களுக்கெல்லாம் பஞ்சஸம்ஸ்காரம் செய்து அவர்களை ஸ்ரீவைஷ்ணவர்களாக்கி அவர்களுக்கு உபதேசம் செய்ய வேண்டும் என்பதே அவர்களுக்கு இவர் இட்ட கட்டளை. இதில் தம் உறவினர்களுக்கும் ஒரு ஸ்தானம் கொடுத்து அவர்களை பல திவ்யதேசங்களில் இருந்து கொண்டு நம் தர்சனத்தை பரப்பச் செய்தார்.

எம்பெருமானார் மூலம் வைணவம் தழைத்த செய்தியை அவர் அடி பணிந்துய்ந்த எம்பார் ஓர் அழகான சுலோகத்தில் உரைத்துள்ளார். அதை கீழே அனுபவிப்போம். இந்தச் சுலோகத்தை ஒவ்வொருவரும் நித்யாநுஸந்தானமாகக் கொள்ளவேண்டும் என்பதே அடியேனுடைய பிரார்த்தனை ஆகும்.

லக்ஷ்மீ நாதாக்ய ஸிந்தௌ ஶடபுரிஜலத: ப்ராப்ய காருண்ய நீரம்
நாதாத்ராவப்யஷிஞ்சத் ததநுரகுவராம்போஜ சக்ஷுர்ஜராப்யாம் /
கத்வாதாம் யாமுனாக்யாம் ஸரிதமத யதீந்த்ராக்ய பத்மாகரேந்த்ரம்
ஸம்பூர்யப்ராணி ஸஸ்யே ப்ரவஹதி பஹுதா தேஶிகேந்த்ரப்ரமௌகை: //

இலக்குமி நாதனாம் பெருங்கடலில் நம்மாழ்வாராகிய மேகம் கருணையாகிற நீரைப்பருகி ஸ்ரீமந் நாதமுனிகளாகிற மலையிலே பொழிந்தது. அந்நீர் புண்டரீகாக்ஷரென்னும் உய்யக்கொண்டார், ஸ்ரீராமமிச்ரர் என்னும் மணக்கால் நம்பி ஆகிய இரு அருவிகளின் மூலம் ஸ்ரீயாமுனாசாயர் என்னும் ஆளவந்தாராகிய பேராற்றை அடைந்தது. அதிலிருந்து பெரியநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, பெரிய திருமலை நம்பி, திருவரங்கப்பெருமாள் அரையர், திருமாலையாண்டான் என்னும் திருநாமங்களையுடைய ஐந்து ஆசார்யர்களாகிற கால்வாய்கள் மூலம் எம்பெருமானாராகிற ஏரியை அடைந்து 74 ஆசார்யர்களாகிற மதகுகளாலே உயிர்களாகிற பயிரின் பொருட்டுப் பெருகிறது என்னும் கருத்துடைய மேல் குறித்த சுலோகம் லக்ஷ்மீநாதன் முதலாக நாதமுனிகள் ஆளவந்தார் இடையாக 74 சிம்மாசனாதிபதிகள் உள்ள குருபரம்பரையைக் குறிக்கிறது. எம்பெருமானார் 700 யதிகளாலும் 74 சிம்மாசனாதிபதிகளாலும் மற்றும் எண்ணற்ற விஷ்ணு பக்தர்களாலும் ஸேவிக்கப்பெற்றவராய் திருவரங்கத்தில் எழுந்தருளியிருந்து நம் தரிசனத்தை நடத்தி வந்தார். அன்றுபோல் இன்றும், என்றென்றும் இவ்வுலகம் இருக்கும்வரை ஸ்ரீவைஷ்ணவ கல்பவிருக்ஷம் தழைத்தோங்கி வரும்படி செய்த பெருமை நம் எம்பெருமானாரையே சாரும் என்று கூறுவதில் ஐயம் ஒன்றும் இல்லை.

மேலே கொடுத்துள்ள விஷயங்கள் கீழ்கண்ட நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டது :

1)ஆசார்யவைபவ மஞ்ஜரி – புத்தூர் ஸ்ரீ உ.வே கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி தொகுத்தது.
2)ஆழ்வார் திருநகரி ஸ்ரீமத் ஆத்தான் கிழத்திருமாளிகை ஸ்வாமிகள் வைபவம்.
3)ஆசார்யர்கள் வைபவ சுருக்கம் - ஸ்ரீ உ.வே.அப்பாழ்வார் ஸ்வாமி தொகுத்தது.
4)இளையவில்லி ஸ்ரீ உ.வே.சடகோபாசார்யர் ஸ்வாமி சதமாநோத்ஸ்வ சிறப்பு மலர்
5) ஸ்ரீஆயி ஜனன்யாசார்யர் வாழ்க்கை வரலாறு மற்றும் கிருதிகள் - வெளியிடுவோர் - ஸ்ரீயாதவாத்ரி ஜனன்யாசார்ய ஆயி கைங்கர்ய வர்தினி சபை. இந்த நூல் தமிழில் வெளி வருவதற்கு கோயில் ஆத்தான் ஸ்ரீ.உ.வே.விஜயராகவன் ஸ்வாமி மிகவும் உதவி செய்தார்.
6) பெரியதிருமுடியடைவு - ஸ்ரீ கந்தாடை நாயன் அருளியது.
7) காட்டு மன்னார் கோயில் முணைவர் ஸ்ரீ.உ.வே. கச்சிக் கடாம்பு எம்.ஸ்.வேங்கடாசார்யர் ஸ்வாமி தொகுத்து எழுதிய கிடாம்பி ஆச்சான் வைபவம் என்ற கட்டுரையிலிருந்து சில விஷயங்கள் எடுக்கப்பட்டுள்ளது.

**ஸ்ரீமந்மஹாபூதபுரே ஸ்ரீமத்கேஸவயஜ்வந: ।**
**காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம் ॥**

**ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு முநீந்த்ராய மஹாத்மநே ।**
**ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்ய மங்களம் ॥**

**மங்களாஶாஸந பரை: மதாசார்ய புரோகமை: ।**
**ஸர்வைஶ்ச பூர்வை ராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம் ॥**

ஸ்வாமி எம்பெருமானார் திருவடிகளே சரணம்

வாசிக தோஷ: க்ஷந்தவ்ய:

அடியேன் ராமாநுஜ தாஸன்
கோயில் ஆத்தான் கஸ்தூரிரெங்கன்
மார்கழி – திருவாதிரை – 23.12.2018